உ

குருபாதம்.

சிவ! திருச்சிற்றம்பலம். சிவ!

# மரபும், மரபறியார் கூற்றும்.





ஆக்கம் :

சிவம்பெருக்கும் சீலர், சமயபோதனா ரத்தினம்,

திரு.யாழ் - **பால சுந்தரம்** பி.ஏ.பி.எல்.,

வெளியிடுவோர் :

ஸ்ரீகுருஞான சம்பந்தர் பணிமன்றம்,

வடக்குமாசி வீதி, மதுரை-1.

உ

குருபாதம்.

# முன்னுரை

திருமுறைத்தமிழ், வேதாகம வழக்கை விதந்து ஓதித் தமிழ்மரபைப் பேணிக்காத்து வருவது.

வேத வேள்வியை உடன்படாமல், திருமுறையையே தலைமீது கொண்டு, கிரியைக்குப் பயன்படுத்தி வரும் மரபற்ற நிலைபெருகி வருகிறது. அன்பும் அருளும் கொண்ட பெரியோர் பலரும், தெரியாது இதனை ஆதரித்தும் வருவது பெருகி வருகிறது. இதனை இளைதாகவே களைய வேண்டிய பொறுப்பு குருபீடங்கட்கு உரியது. அவர்களிலும் சிலர் தடம் மாறி வழிப்படுத்தி வருவது தமிழ் நாட்டின் தீயூழாகும் இதனைத் தருமையாதீனக்குருமணிகள் துணிந்து தவறு என்று திருவாய்மலர்ந்து, சார்ந்தவரை வழிப்படுத்தி வருகின்றார்கள். அதற்குத் துணை நின்று கயிலை மாமுனிவர் காசிவாசி எஜமான் சுவாமிகள் விளக்கம் செய்து வருவதை அடியொற்றி, இதனை வெளியிடுபவர் ஆய்வும் சைவத் தோய்வுமுடைய எனது கெழுதகை நண்பர் திரு. யாழ்.பாலசுந்தரம் அவர்கள். சிறந்த வழக்கறிஞராகிய அவர் முன் வைக்கும் வாதங்களால் மற்றவர் திருந்தாவிடினும் நம்மவர் திருந்தவாய்ப்பாகும் என்று அவரைப் போற்றிடுவேன். வாழ்க அவர் தம் பணி !

அடியவன்,
தருமையாதீனப்புலவர்,
தாண்டவ குருசாமி தேசிகர்,
செயலாளர்,
ஸ்ரீகுருஞானசம்பந்தர் பணிமன்றம்,
மதுரை–1.

1.5.07
மதுரை

5-2

உ

## About the Author

Th. M.Y. Balasundaram, an octogenarian, is a versatile Scholar in both Tamil and English with additional qualification in law, having passed B.L. Examination with high second class. He entered Govt. Service and retired as Deputy Secretary to Govt., after putting a total unblemished service of about 33 years in Tamilnadu Secretariat. He worked during the Chief Ministership of Thiruvalargal Rajaji, Kamaraj, Bakthavatchalam, Anna, M.Karunanidhi, M.G.R. and Smt. V.N.Janaki. As regards his quality of work, Thiru. T.V.Venkataraman I.A.S., the then chief Secretary to Govt., recorded on 4.2.88 as follows:-

" Thiru. M.Y.Balasundaram has worked as Under Secretary to Govt. in the P&E Dept for nearly two years.

He is sincere, loyal, trustworthy and hard working. He has retired from service on 31.1.88.

I wish him success in his retired life."

Besides good academic career, he won prizes for oration and acting, during his college and high school days.

As the Secretary to the cultural festival of the Tamil Sangam of Madras Law College, he arranged for the addresses of Tamil Scholars such as Thiru Ki.Va Jagannathan, Thiruppugalmani Krishnasami Iyer, Thiruvachagamani K.M.Balasubramaniam, Mr.M.Anantha Narayanan I.C.S. and Thiru. M.Karunanithi. During his tenure, late lamentable C.N.Annadurai came to the Law College (for the second time) and delivered a captivating speech under the chairmanship of Th. Narana Durai Kannan.

When he was the Secretary of the Fore shore Residents Association, Srimath Soma Sundara Tambiran Swamigal, the 26th pontiff of Dharmapuram Adheenam, as he then was, came to Fore shore Estate and preached to the residents of the Association.

After retirement, he undertook pilgrimages to Nepal Pasupathinath and the abodes of twelve Jothir Linghas. Having had Acharya Abishekam, he preformed certain kumbabishekams, the notable being the Kumbabishekam of Kunrakudi Adigalar's Guru Muhurtham in tamil, however, under Agamic ways.

When "Kumudam" wrote ill of mutts and Madathipathis, Th. Balasundram suitably defended those illustrious institutions by publishing a small booklet viz "குமுதமும் கொலை வழக்கும்" It was widely circulated among the people of South India. The Head of Sri Kasimutt, Ejaman Swamigal,appreciated it and observed as follows :

மதுரை திரு. எம்.ஒய்.பாலசுந்தரம் அவர்கட்குச் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

தங்கள் 21.8.02 தேதிய கடிதமும் குமுதம் இதழ்க்கட்டுரைக்குத் தாங்கள் தயாரித்துள்ள பதில் அறிக்கையும் வந்து சேர்ந்து பார்வையிடலாயிற்று.

மிகவும் நுண்மையாகச் செய்திகளைத் தொகுத்து எழுதியுள்ள திறம் பாராட்டிற்குரியது. பலர்க்கும் தெரியாத பழைய செய்திகள் சில உள்ளமை குறிப்பிடத்தக்கது.

5-2

Thiru Balasundaram has also written a short history of Nirambavalagiya Adheenam at Thulavur, near Kunrakudi. A second and enlarged edition was also brought.

As the Govt. intended to throw open the Archagarship to all the people, irrespective of caste and creed, he compiled a syllabus for the training, in a form of a small booklet and communicated to one and all including Th. Satyavel Murugan.

The Head of the Kasi mutt has appreciated the drafting and observed as follows :

" மதுரை சித்தாந்தச் செம்மல் சிவத்திரு. யாழ். பாலசுந்தரம் அவர்கட்குச் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

"அர்ச்சகர் பயிற்சி - ஒரு கண்ணோட்டம்" எனும் நூலைக் கண்ணுற்றோம் மிக்க மகிழ்ச்சி. சரியான காலத்தில் செறிவான செய்திகளுடன் இந்நூலை எழுதியிருப்பது பாராட்டுக்குரியது.

கருத்துக்கள் உண்மையானவை. தமிழ் மக்கள் உணர வேண்டியவை. தங்களின் கருத்துக்கள் தமிழ் மக்கள் மனதில் பதியவும், தெளிவு பெறவும், செந்திற்கந்தன் சேவடிகளை நினைந்து பிரார்த்திக்கிறோம். வாழ்த்துகிறோம்"

As regards the present controversy about the inagural address by Maha Sannithanam of Dharma puram on 5.3.07 during Aranarul Panniru Thirumurai festival, Th Balasundaram leaped forward with the defending armoury. The book is now in your hands. Consider the pros and cons and judge the case in the right manner.

Thanking you,

*Yours faithfully*

***T.S. Sattanathan,***
*Chief Accounts Officer (Retd.),*
*Govt.of Tamilnadu,*
*Agraharam, Thiruvedagam, Madurai District.*

## மரபும், மரபறியார் கூற்றும்.

ஆதீனங்களை அறநிலையங்கள்* என்பது மரபு. அறம் என்ற பொருள் தரும் 'தரும' என்ற சொல்லையே தலைப்பாகக் கொண்டு விளங்குவது திருத்தரும புரவாதீனம். இவ்வாதீனத்தை இறையன்பர்கள் போற்றுவது பெரிதன்று. இறைமறுப்புக் கொள்கையுடையாரும் போற்றியதே வியப்பு. தமிழ்நாட்டில் திராவிட இயக்கங்கள் அனைத்தும் ஒரே குரலாக ஏற்றுக்கொண்ட கவிஞர் பாரதிதாசன். இவர் தருமையாதீனத்தின்பாலும் அதன் முதன்மைச் சீடரான ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் மீதும் அடங்காத பற்றுக் கொண்டவர். தாமெழுதிய "பொன்முடி" என்ற நூலில் ஸ்ரீகுமர குருபர சுவாமிகளையும் ஒரு மதிப்பு மிக்க பாத்திரமாக்கித் தானும் மகிழ்ந்து எம்மனோரையும் மகிழ்வித்த பெருந்தகை. இவ்வாறு மாற்றாரும் போற்றிய தருமையாதீனத்துக்குத் தம்மை இறையன்பர் என்று கூறிக் கொள்பவரும் தமக்கு இறைநூலான திருமந்திரத்தில் மிகுந்த நாட்டமுண்டு என்பவரால் ஒருசோதனை வருகிறது என்பதையறிய மெய்யன்பர்கள் உள்ளங்கள் புண்படுகின்றன.

"செந்தமிழ் வேள்விச் சதுரர், சித்தாந்தக் கவிமணி சத்தியவேல் முருகசிவனார் பி.இ., எம்.ஏ., தமிழ் வழிபாட்டுப் பயிற்சி மைய நிறுவனர் மற்றும் இயக்குநர்" "26-ம் பட்டத்தை முன்னைத்தவத்தால் அலங்கரிக்கின்ற தருமையாதீனம் திருப்பெருந்திரு சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய சுவாமிகளுடன்" ஒரு பொது மேடையில் உரிய முறையில் விவாதம் செய்யத் தயாராக விருப்பதாக 23.3.2007 தேதியிட்ட கடிதத்தில்

---

** திருவாவடுதுறையாதீன வரலாறு த.ச.மீயால் அரசவனத்து அறநிலையம் என்று பெயரிடப்பட்டது.*

அறிவிக்கையிட்டுள்ளார். இதனைக் கண்டவுடன் எனக்கு சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் ஜெர்மனி நாட்டில் அப்போது ஒரு சிறிதும் அறிமுகமில்லாத ஹிட்லர் அவரது தேசத் தலைவருக்குத் தன்னுடன் “வாதிடத் தயாரா” என்று பத்திரிக்கை வாயிலாகச் சவால் விட்டுத் தன் நாட்டுத்தலைவருடன் இன்ன தேதியில் இன்னவிடத்தில் விவாதம் நிகழும் எனப் பத்திரிக்கைகளில் விளம்பரம் செய்தது நினைவுக்கு வருகிறது. அப்படி ஹிட்லர் குறித்த நாளிலும் இடத்திலும் அந்நாட்டுத் தலைவர் வரவில்லை என்றாலும் தந்திரசாலியான ஹிட்லர் அந்நாட்டுத் தலைவர் முன்னர் பேசிய பதிவு செய்த பேச்சினைப் பகுதி பகுதியாக ஒலிபரப்பி அதற்குத் தனது பதிலுரையைப் பேசி விவாதத்தை முடித்தார். ஹிட்லரின் நோக்கம் என்ன? ஹிட்லரை மதித்து (Because Hitler was then a nameless person) அந்நாட்டுத் தலைவர் விவாதமேடைக்கு வரமாட்டார் என்பது ஹிட்லருக்குத் தெளிவாகத் தெரியும். எனினும் ஹிட்லரின் விளம்பர மோகம் அவரை இவ்வண்ணம் செய்ய வைத்தது. மேலும் ஹிட்லர் அவரது நாட்டு மக்களிடம் பரவலாக அறிமுகமாக அந்தச் சவால் உதவியது. இது ஹிட்லரது பாணி.

இந்தப்பாணியைச் செந்தமிழ் வேள்விச் சதுரர் அறிந்தோ அறியாமலோ கைக்கொண்டுள்ளார். சவால் விடுக்கையில் தருமையாதீன சன்னிதானம் இதனைப் பொருட்படுத்தமாட்டார்கள் என்பது சதுரருக்கு மட்டுமின்றி அனைவருக்கும் தெரிந்தவொன்றே. ஆயினும் தனது பெயர் பரவலாகப் பேசப்படவேண்டுமென்ற ஆசையினால் இப்படி ஒரு சவாலை விடுத்துள்ளார் என்பதே உண்மை. மேலும் தருமையாதீனக் குரவருக்கு எதிராக to create a mass movement, to organise the art of propaganda among masses, use of spiritual terror எனும் ஹிட்லரது தந்திரங்களை வெகுவாகக் கடைப் பிடித்துள்ளார். இவர் சந்நிதானத்தின் உரையை நேரே

செவிமடுக்கவில்லை என்று அவரே ஒப்புக் கொண்டுள்ளார். ஒரு நாள் முழுதும் ஓயாது சதுரருக்கு வந்த தொலை பேசிச் செய்திகளால் உந்தப்பட்டு இவ்வண்ணம் செயற்பட்டதாக அவர் குறிப்பிடுகிறார். (இதுவும் ஹிட்லரது பாணி) தாம் நேரில் கேட்காத, பார்க்காத, உணராத ஒன்றை பிறர் சொல்வதன் மூலம் அறிந்து கொண்டு நடவடிக்கை தொடருவது சரியில்லை என்பது சட்ட நிபுணர்கள் கருத்து. (Hearsay has no evidentiary value)

மூன்றாண்டுகளுக்கு முன்னர் குமுதம் என்னும் பத்திரிக்கையில் சைவத்தையும் தமிழையும் புரக்கும் சைவ ஆதீனங்களையும் அவற்றின் தலைவர்களையும் மடாதிபதிகளையும் மனம்போன போக்கில் இழித்தும் பழித்தும் விமர்சனம் செய்த போது கிளர்ந்து எழாத சென்னையன்பர்கள், தேவாரம் முறையாகப் பயின்று தேவார ஓதுவாராக இறைபணியைத் தொடங்கி ஆதீன அடியவராகிப்பின் "பட்டணம் சுவாமி" யாகி படிப்படியாக உண்மைத் தவத்தால் (முன்னைத் தவத்தால் மட்டுமின்றி) தருமையாதீனக் குரவராக ஆதீன அடியவர்களால் தேர்ந்தெடுக்கப்பெற்றுக் குருபீடத்திற்கு அணி சேர்க்கும் செந்தமிழ் முனிவரை முனிவது சரியாகுமா? எண்ணிப் பார்க்கவும். நேர்மையாக உண்மையைஅறிய வேண்டுமென்றால் பிறர் கூறுவதை "வேதவாக்காக" எடுத்துக் கொள்ளாமல் மகா சன்னிதானம் முன்சென்று பணிந்து வினவி அறிந்து கொண்டிருக்கலாம். ஏற்கனவே இதற்கு முன்பு சந்நிதானத்தைப் பேட்டி எடுத்துத் தன் பத்திரிக்கையில் பிரசுரித்தவர் தானே இச்சதுரர்?

சதுரர், பொறியியற் பட்டம் பெற்றுப் பின்னர் முதுகலைப் பட்டம் பெற்று அதற்கும் பின்னர் தத்துவ முதுகலையும் படித்துள்ளார். இவையனைத்தும் இவருக்கு அணி செய்வனவேயன்றி இவர் ஆற்றும் பணிக்கு உதவுவனவா? இவருடைய வாழ்வாதாரத்துக்கு இவை

உதவுவனவா? என்றால் இல்லை என்றே கூற வேண்டும். இப்போது இவரது வாழ்வாதாரம் "செந்தமிழ் வேள்வி" யாற்றுதற்கு வரும் "காணிக்கைகளும்" "தட்சிணை" களுமேயாம். ஆனால் சென்ற நூற்றாண்டில் புகழ்பெற்ற தமிழறிஞராக வாழ்ந்த பொறியாளர் ஒருவர் இருந்தார். அவரே பா.வே.மாணிக்க நாயக்கர். அவர் தான் மேட்டூர் அணையை வடிவமைத்தவர். அவரது முதற்பணி பொறியியற்றுறையிலும், விரும்பிய பணி தமிழ் மொழியாராய்ச்சியிலும் கழிந்தன. கா.சு.பிள்ளை, மறைமலையடிகள், திரு.வி.க.,போன்ற அறிஞர் பெரு மக்களால் நன்கு மதிக்கப் பெற்றவர். அவர்போன்று சத்தியவேல் முருகனும் முத்திரை பதிக்க வேண்டுமென விரும்பியவர்களில் இக்கட்டுரையாளனும் ஒருவன். ஐயகோ! இவர் பாதை மாறி, வேண்டாத வேலையில் தம்மையீடுபடுத்திக் கொண்டு விட்டார்.

தமிழையும் சைவத்தையும் புரக்க வேண்டுமென்றே ஏற்பட்ட பல்வேறு நிறுவனங்களில் பதினெண் சைவ ஆதினங்கள் தலையாயவை. இவை, சைவத்தின் மேற்பற்றுக் கொண்ட அருளாளர்களால் இறைவன் திருவுளக் கிடக்கையின் வண்ணம் அமைக்கப்பெற்றவை. இதன் நிறுவனர்கள் எந்த நன் நோக்கத்துக்காக இவ்வாதீனங்களை நிறுவினார்களோ அந்நோக்கத்தை அணுவளவும் பிசகாமல் நிறைவேற்றியாக வேண்டும். ஆதீன குரு முதல்வரைப் போன்று பின்வரும் குரவர்க்ளும் சமய பரிபாலனம் செய்து அறக்கட்டளைகளை நிறைவேற்றி, பக்குவர்களுக்குத் தீக்கை, உபதேசம் செய்தல் வேண்டும். அவர்கள் திருத்தலயாத்திரைகளை மேற்கொண்டு நாட்டில் ஏற்படும் உற்பாதங்களைக் களைய வேண்டும். சமயத் தொண்டுடன் சமுதாயத் தொண்டும் இணைந்து ஆற்ற வேண்டும். இக்குறிக்கோளுடன் வேதம், ஆகமம், திருமுறைகள்,

புராணங்கள், இலக்கியங்கள் ஆகியவற்றைத் தக்கவர்களைக் கொண்டு ஆர்வலர்களுக்குப் பயிற்றுவிக்க வேண்டும். இவையனைத்தும் ஆதிகுருமூர்த்திகளின் எண்ணங்களையும், குறிக்கோள்களையும் நிறைவேற்று வதாக விருக்க வேண்டும்.

இவ்வாதீனங்களைச் சைவவேளாளர்கள் என்ற இனத்தார் மட்டும் தோற்றுவித்தனர் என்பது முழு உண்மையல்ல. மதுரை யாதீனத்தைத் தோற்றுவித்தவர் சமய குரவர்களில் ஒருவரான வேதியர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஆவார். அதே போல் சூரியனார் கோவில் ஆதீனத்தை நிறுவியவர் சிவாக்கிரயோகிகள் (சிவக்கொழுந்து தேசிகர்) இவரும் வேதியரே. குன்றக்குடி திருவண்ணாமலையாதீனத்தைத் தொடங்கியவர் தெய்வசிகாமணி சிவாச்சாரியார். இவர் மெய்கண்டாரது சீடர் குழுவிலிருந்தவர். ஆதி சைவர். இவர்கள் தமிழையறிந்தது போல் வடமொழியையும் அறிந்தவர்கள். எடுத்துக்காட்டாகத் துழாவூர் நிரம்பவழகியவாதீனத்தை நிறுவியர் சத்யஞானப் பிரகாசர். இவர் வடமொழியிலமைந்துள்ள அனைத்து ஆகமங்களையும் நுணுகியாராய்ந்து "சகலாகம சாரசங்கிரகம்" என்ற வடமொழி நூலை இயற்றியருளினார். இது பத்ததிகள் எழுவதற்கு முன் கிரியைகளைச் செய்ய உதவிய நூல்.

மேல்வருணத்தாரால் சந்நியாசம்பெறத் தகுதியற்றவர்கள், சூத்திரர்கள், சூத்திர மடங்கள் என்று தாழ்வாகப் பேசப்பட்டவர்கள். ஆயினும் தக்க ஆதாரங்களை வேதாகமங்களிலிருந்தே எடுத்துக்காட்டி சைவ சந்நியாசம் உண்டு என்பதை இவர்கள் நிலை நாட்டினார்கள். இதெல்லாம் வடமொழியில் புலமை பெற்றிருந்தமையினால் அன்றோ சாத்திய மானது? திருவாவடுதுறையாதீனத்து சிவஞானமுனிவரும், தருமையாதீன அடியவரான வெள்ளியம்பல வாண முனிவரும் வடமொழியில் வல்லுநர்கள்.

காசித்திருமடத்தை நிறுவிய குமரகுருபரமுனிவரும் வடமொழியை நன்கு அறிந்தவரே. இவ்வண்ணம் சைவ ஆதீனங்கள் வழிவழியாக வடமொழியைப் போற்றி வந்துள்ளனர். எனினும் வடமொழி வேதாந்தக் கொள்கையை மறுத்து சித்தாந்தக் கொள்கையை ஐயந்திரிபற நிலை நாட்டியுள்ளனர். இப்படி சைவ ஆதீனங்கள் அனைத்தும் இவ்விரு மொழிகளையும் இருகண்களாகப் பாவிப்பதே மரபு. இவ்வாதீனங்கள் தமிழைப் பேணிக்காப்பதிலும், வளர்ப்பதிலும் வேறு எவருக்கும் பிற்பட்டவர்கள் இல்லை. தமிழ்மொழியைச் சாதிமத பேதமின்னியில் புரக்கின்றனர். எடுத்துக்காட்டாகத் திருப்பனந்தாள் காசிமடத்து அதிபராக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் 1935ம் ஆண்டு பதிப்பு நிதிக் கட்டளையொன்றை நிறுவி அதற்காக முன்னூறு ஏக்கர் நஞ்சை நிலத்தை ஈந்து அவ்வறக் கட்டளையை நிர்வகிக்கும் பொறுப்பை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தாரிடம் ஒப்புவித்துள்ளார்கள். அதில் அச்சிட வேண்டிய நூற்களின் பட்டியலையும் கொடுத்துள்ளார்கள். அந்தப் பட்டியலில் சைவ இலக்கியங்கள் மட்டுமல்லாமல் இராமாயணம், பாரதம், பாகவதம் முதலான நூற்களைச் சேர்த்திருப்பது வியப்புக்குரியதல்ல. பிறசமய இலக்கியங்களான சீறாப்புராணம் தேம்பாவணி, இரட்சண்யயாத்ரீகம் ஆகிய இசுலாமிய கிறித்துவ சமய இலக்கியங்களையும் அச்சிட்டு அடக்கவிலையில் கால் விலைக்கும், பின்னர் அடக்க விலையில் 1/8 விலைக்கும் விற்கவேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது, எத்தனை பரந்த, விரிந்த, மனப்பான்மை; சமரச மனப்பான்மை; மதசகிப்புத்தன்மை என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

காசித் திருமடத்தார் இமயத்தலமாகிய திருக்கேதாரம் தொடங்கி இராமேசுவரம் வரையுள்ள தலங்களில் திருமுறைக் கல்வெட்டுக்கள் பதித்துள்ளார்கள். சிதம்பரம்

சிவகங்கைத் தீர்த்தக்கரையில் திருவாசகம் முழுமையும் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளது. மதுரைப் பொற்றாமரைக்குளத்தின் கரையில் திருவள்ளுவ தேவ நாயனாரது திருக்குறள் அரங்கேற்றியதை நினைவு கூரும் வண்ணம் 1330 பாடற்களும் சலவைக் கற்களில் பொறிக்கப்பட்டுள்ளன. மேலும் மெய்கண்ட தேவநாயனார் அருளிச் செய்த சிவஞானபோதமும் அதன் ஆங்கிலமொழி பெயர்ப்பும் பொற்றாமரைக் கரையில் கல்வெட்டாக நிறுவ மதுரைச் சித்தாந்த சபைக்குப் பொருளுதவி செய்யப் பெற்றது. மதுரைக் கோவில் அம்மன் சந்நிதி ஆறுகாற்பீடத்தில் தான் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் திருமலை மன்னர் முன்னிலையில் ஸ்ரீகுமரகுருபரரால் அரங்கேற்றப்பெற்றது. அதன் நினைவாக அங்கே இருபாடல்கள் கல்வெட்டில் காசித் திருமடத்தினரால் பொறிக்கப்பட்டுள்ளன. அத்துடன் சென்னைப் பல்கலைக்கழகத்தின் கீழ் இயங்கும் கல்லூரிகளில் பட்டப்படிப்பில் தமிழில் முதலாவதாகத் தேர்ச்சி பெறும் மாணவர் ஒருவருக்கு 1935-ம் ஆண்டு முதல் ரூ. 1000/- பரிசளிக்கப்பெற்றது. இதனை முதன் முதலாகப் பெற்றவர் பெரிய புராணத்துக்குப் பேருரை கண்ட பெருமகனாகிய சிவக்கவிமணி சி.கே.சுப்பிரமணிய முதலியார் ஆவார். இவருடன் இப்பரிசுக்குப் போட்டி போட்டவர் தணிகைமணி வ.சு.செங்கல்வராய பிள்ளை. இருவரும் தமிழ்த்தேர்வை மிகவும் சிறப்பாக எழுதியிருந்தனர். தேர்வாளர்கள் திகைத்தனர். இறுதியாக ஆங்கிலத்திலிருக்கும் கவிதையை மொழி பெயர்க்கும் வேளையில் தணிகைமணியவர்கள் கத்திய ரூபத்திலும் சிவக்கவிமணியவர்கள் பத்தியரூபத்திலும் மொழி பெயர்த்திருந்தனர். ஆகவே பரிசு சிவக்கவிமணி யவர்களுக்கே கிட்டியது 1935-ம் ஆண்டில் ஒரு பவுன் சுமார் 12 ரூபாய்க்கு விற்றது. அதன்படி அந்தக் காலத்தில் அப்பரிசின் மதிப்பு 85 சவரன் ஆகும். அதன் இன்றைய

(2007) மதிப்பு 5,78,000 ரூபாய் ஆகும். பின்னர் ஒருசமயம் இப்பரிசினை இரண்டாகப்பிரித்து இருவருக்கு ஆளுக்கு ரூ. 500/- வீதம் கொடுக்கலாமா என்ற கருத்து முன்வைக்கப்பட்ட போது தமிழ்த்தாத்தா உ.வே.சாமி நாதய்யர் "ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறையனாரே" என்ற தேவாரப் பகுதியைச் சுட்டிக்காட்டி ஆயிரம் ரூபாயையே பரிசுக்கிழியாகத் தொடர வைத்தார்.

சென்ற ஆண்டில் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் தமிழ் எம்.ஏ. படிக்கும் மாணவர்கள் 81 பேருக்கு ரூ.1000/- வீதம் உதவித் தொகை அளிக்கப்பெற்றது. இவையனைத்தும் திருப்பனந்தாள் காசிமடம் செய்யும் தமிழ்த்தொண்டு.

தருமையாதீனத்திலும் 23, 24, 25-ம் பட்டத்தில் இருந்த சந்நிதானங்களின் ஆட்சிக்காலத்தில் பற்பல தமிழ்த்திருமுறைகள் அச்சிட்டு இலவசமாகத் தக்கவர்களுக்கு வழங்கப்பெற்றன. குறிப்பாக 25-ம் பட்டத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாச்சாரியார் காலத்தில் மகாவித்வான் ச.தண்டபாணி தேசிகரவர்களைக் கொண்டு பரிமேலழகராதியாய உரைகள் அனைத்தையும் ஒரே புத்தகத்தில் "திருக்குறள் உரைவளம்" என அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என மூன்று தொகுதிகளாக வெளியிட்டுள்ளார்கள். தற்போது 26-ம் பட்டத்துக் குரவர் சீரிய முறையில் உரையுடன் திருமுறைகளுக்குச் செம்பதிப்பு வெளியிட்டு அடக்கவிலைக்கே அளிப்பதைப் பாராட்டாமல் அதிலும் குறை காணுகிறார் சதுரர். நிற்க

தமிழுக்குத் தொண்டு செய்த / செய்யும் ஆதீனங்களில் திருவாவடுதுறை யாதீனமும் மிக உயர்ந்த நிலையில் உள்ளது. அவ்வாதீனக் குலதெய்வமாக விளங்கிய ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள் தொல் காப்பியத்துக்குச் சூத்திர விருத்தி எழுதியுள்ளார். பற்பல பிரபந்தங்களும், மொழி பெயர்ப்பு நூற்களும், கண்டன நூற்களும் காஞ்சிப்புராணம் முதற்காண்டமும்

இயற்றியுள்ளார். எல்லாவற்றிக்கும் மேலாக சிவஞான போத மாபாடியம் இயற்றித் தமிழில் பாடியம் (அகலவுரை) இல்லாக்குறையை நீக்கினார். அவரது மாணாக்கராகிய கவிராட்சச கச்சியப்ப முனிவர் தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர், மதுரகவி சுப்பிரமணியமுனிவர் முதலானோர் தமிழுக்குத் தொண்டு செய்தவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள். கவிராட்சச கச்சியப்ப முனிவர் விநாயக புராணம் பாடிய பெரும் புலவர்.

வேளூர் சுப்பிரமணிய தேசிகர் எனும் குரவர், பத்துக் கம்பர் எனப்புகழப் பெறும் மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்க்கே தமிழ் இலக்கியங்களில் ஏற்பட்ட ஐயங்களைத் தீர்த்தருளியவர்கள். மகாவித்வான் பின்னர் மேலகரம் சுப்பிரமணிய தேசிகர் சின்னப்பட்டத்திலிருந்த போது ஆதீன வித்வானாக நியமிக்கப்பெற்றார். மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் திருவாவடுதுறை யாதீனத் துக்குக் கிடைத்த, கிடைத்தற்கரிய தமிழ்ப் புதையல். அவர் நூலாசிரியராகவும், உரை யாசிரியராகவும், போதகாசிரியராகவும் தமக்கு ஒப்பாரும் மிக்காருமின்றி விளங்கியவர். அவரது தலைமாணாக்கர் குடந்தை அரசினர் கல்லூரித் தமிழாசிரியராக விருந்த பூவாளூர்த் தியாகராஜ செட்டியார், பிள்ளையவர்களுடைய பெருமையை உலகுக்குக் காட்டிய உ.வே.சாமிநாதய்யர், பிள்ளைய வர்களுடன் சல்லாபம் செய்து மகிழ்ந்த மாயூரம் முன்சிப் வேதநாயகம் பிள்ளை ஆகியோர் ஆதீனத்துக்கு அணி செய்தவருள் முக்கியமானவர்கள்.

மேலும் குன்றக்குடி திருவண்ணாமலை யாதீனத்தை அடுத்த துழாவூரில் உள்ள நிரம்ப அழகிய தேசிகராதீனத்துக் குரவர்கள் சிவஞான சித்தியாருக்கு உரை கண்டவர்கள். இவ்வாதீனத்தார் செய்த திருவருட்பயனுரை மிகக் சிறந்தது. இவர்கள் செய்த திருப்பரங்கிரிப்புராணமும், சேது புராணமும் தமிழ் இலக்கியவுலகில் மைல் கற்கள் என திருச்சிற்றம்பலம் மு.அருணாசலம் பிள்ளை கூறுவார். இவ்வாறு தமிழுக்கு அணி செய்த ஆதீனங்களின் பெருமையைச் சதுரர் உணரத் தவறிவிட்டார்.

தாய்மொழியுடன் பிற மொழிகளையறிந்து கொள்வது தவறான செயலல்ல. ஆங்கில மொழியை ஆங்கிலேயருக்கு இணையாக, ஏன் மேலாகச் சொற்பொழிவாற்றிய மகாகனம் சீனிவாச சாஸ்திரி, சசிவோத்தமசர் சி.பி.இராமசாமியய்யர், சர்.ஏ.ராமசாமி முதலியார், சர்.ஏ.லட்சுமணசாமி முதலியார், சத்தியமூர்த்தியார், திருவாசகமணி கே.எம்.பாலசுப்பிரமணியம், திரு.பி.பி.பாலசுப்பிரமணியம், அறிஞர் அண்ணா ஆகியோரால் தமிழர்களுக்குப் பெருமையேயொழிய வேறல்ல. இதே போல தமிழராகப்பிறந்து வடமொழியிலும், புலமைபெற்று விளங்குவது தமிழருக்குப் பெருமை யேயன்றி இழுக்கல்ல என்பதைச் சதுரர் அறிந்து கொள்ள வேண்டும். இவ்வகையில் சிவஞான சுவாமிகள், மறைமலையடிகள், பண்டிதமணி கதிரேசச் செட்டியார் ஆகிய ெபருமக்களால் தமிழுக்குப் பெருமையே தவிர சிறுமையல்ல.

இப்பொழுது வடமொழி பற்றிய சர்ச்சையை யாராய்வோம். சமஸ்கிருதம் என்ற சொல்லுக்குப் பொருள் “திருத்தமாகச் செய்யப்பெற்றது” என்பதே. களப்பிரர் காலத்தில் களையிழந்த தமிழ் மொழி, பல்லவர்கள் காலத்தில் பின் தள்ளப்பெற்று வடமொழிக்கு ஏற்றம் அளிக்கப்பெற்றது. வடமொழி நீண்டகாலமாக எழுத்து வடிவம் இல்லாமல் இருந்திருக்கிறது. வேதங்கள் நீண்டகாலமாக வாயால் ஓதப்பெற்று செவியால் கேட்கப்பட்டு மனனம் செய்யப்பெற்று வந்தன என்பது அனைவரும் ஏற்றுக்கொண்டதாகும். அதனால் அதற்கு “ ஓத்து” என்ற பெயரும் உண்டு. வடமொழி, கரடு முரடாக விருந்ததைச் செப்பஞ்செய்தது நுண்மாண் நுழைபுலம் மிக்க தமிழர்களே என சிலவாராய்ச்சியாளர் கருதுகின்றனர். இப்படி வடமொழியைச் செப்பஞ் செய்தவர்களுள் தென்னாட்டு சிவாச்சாரியார்களும், ஆதீனவடியவர்களும் முதன்மையானவர் ஆவர். தற்காலத்திலும் ஆங்கிலப்பட்டம் பெற்ற தமிழ்ப்புலவர் களுக்கே மதிப்பு (அதாவது B.O.L. M.O.L. B.A., M.A.,) என்றிருப்பது போல் முற்காலத்தில் வடமொழியறிந்த

தமிழ்ப்புலவர்களுக்கே மதிப்பு என்றிருந்தது. ஆகவே தான் மாலை மாற்று, ஏகபாத நூற்றந்தாதி முதலான மிறைக் கவிகளையாத்த பெரும்புலவர் அரசன் சண்முகனாருக்கு சென்னை கிறித்தவக் கல்லூரியில் தமிழாசிரியர் வேலை கிடைக்காமல போனது. ஆங்கிலம் அறியாமல் தமிழ் மட்டுமேயறிந்து தக்க பணி பெற்றவர்கள் பண்டிதமணி கதிரேசச் செட்டியார், மதுரை கார்மேகக் கோனார் போன்ற ஒரு சிலரே.

மறைமலையடிகள் தமிழ், வடமொழி, ஆங்கிலம், ஆகிய மும்மொழிகளில் புலமை பெற்றவர். காளிதாசனின் சாகுந்தலத்தைத் தமிழில் மொழி பெயர்த்து, மறைந்த சங்கராச்சாரியாரால் பாராட்டப் பெற்றவர். கா.சு. பிள்ளையவர்கள் ஆங்கிலம் தமிழ் மட்டுமல்லாமல் மலையாள மொழியிலும் புலமை பெற்றவர். அதே போல் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையவர்களும் ஆங்கிலம் தமிழ் மட்டுமல்லாமல் மலையாள மொழியிலும் வல்லுநர். இவர்கள் அனைவரும் "மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணக்கும்" என்ற கொள்கையை நம்பியவர்கள். ஆகவே தமிழகச் சைவ ஆதீனங்கள் வடமொழியிலும் பற்றுக் கொண்டது அடாத செயல் அல்ல.* *வடமொழிப்புலமையும் பற்றும் தமிழுக்கும், தமிழ் வளர்ச்சிக்கும் என்றும் தடையாக இருந்ததில்லை.*

இக்கண் கொண்டு பார்ப்போமேயானால் சைவ ஆதீனத் தலைவர்கள் தமிழ் மொழியுடன் வடமொழியையும் வேதாகமங்களையும் போற்றுதல், அவ்வாதீன நிறுவனர்களின் உள்ளக்கிடக்கையை நிறைவேற்றும் பொருட்டேயாம் என்பது வெள்ளிடை மலை. இந்தச் சூழ்நிலையில் தருமையாதீனத் தற்காலத் தலைவரை குறைகூறுதல் சரியல்ல.

இந்தக்கட்டுரையாளர், ஓதுவார் பரம்பரையைச் சேர்ந்தவர். மணிவாசகப் பெருமான் அவதாரத்தலமாகிய திருவாதவூர் திருமறைநாதர் திருக்கோவில் ஓதுவார். இவர் 1952-ல் மதுரைத் திருப்புகழ் சபையில் சைவ சித்தாந்த சரபம் காசிவாசி ஸ்ரீமத் ஈசான சிவாச்சாரிய சுவாமிகளிடம்

சமய தீக்கையும் பின்னர் திருவண்ணாமலை யாதீனம் குன்றக்குடித்திருமடத்து அடியவராகி, தமிழ் மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளாரிடம் 1953-ல் விசேட தீக்கை, உடையவர் பூஜை, நிர்வாண தீக்கை பெற்றுக் கொண்டவர். இறுதியாக 1998-ல் சித்தாந்தவித்தகர் தி.சு.கோவிந்தசாமி பிள்ளை என்ற ஸ்ரீமத் ஈசான சிவதேசிகரால் ஆச்சாரிய அபிஷேகம் பெற்றவர். மறைந்த குன்றக்குடியடிகளாரது குரு முகூர்த்தத்துக்குச் சித்தாந்தவித்தகர் தி.சு.கோவிந்த சாமி பிள்ளை மற்றும் நீ.சீ. சுந்தரராமன் (கூடல் சுந்தரன்) ஆகியோரைச் சர்வசாதகமாகக் கொண்டு திருவாரூர் தட்சிணாமூர்த்திக் குருக்களை நெறியாளராகக் கொண்டு துழாவூர் ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஆபதோத் தாரண தேசிகரைத் துணையாச்சாரியராகக் கொண்டு இக்கட்டுரையாளர் பிரதான ஆச்சாரியராகவிருந்து ஆறுகால பூஜை செய்து குடமுழுக்கு நிகழ்த்தியுள்ளார். அஃது ஆகமவழியில் தமிழ் மொழியில் நிகழ்த்தப் பெற்றது*

** திருமுறை வழியில் அல்ல. வேள்வியாற்றுவதற்கு திருமுறைகளைக் கொள்ளவில்லை.* அது போது தருமையாதீன குருமகா சந்நிதானம் துழாவூர் நிரம்பவழகியவாதீன குருமகா சந்நிதானம், காஞ்சிபுரத் தொண்டை மண்டலவாதீன மகா சந்நிதானம், சூரியனார் கோவில், சிவாக்கிரயோகிகள் ஆதீன மகா சன்னிதானம், குன்றக்குடி திருவண்ணா மலையாதீன பொன்னம்பல வடிகளார் ஆகிய அருளாளர்கள், ஆதி சைவ குலதிலக டாக்டர் பிச்சைக் குருக்கள் (பிள்ளையார் பட்டி) ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

அப்போது நடைபெற்ற குடமுழுக்கு முறையினை தருமையாதீனக் குரவர் வினவ "ஸ்வாஹா" என்பதற்குப் பதில் தமிழில் 'உவகையாகுக' என்றும் 'நமஹ' என்பதற்குப் பதில் 'போற்றி' என்றும் 'ததாஸ்து' என்பதற்கு பதில் "அங்ஙனமே யாகுக" எனக் கூறப் பெற்றன என்பதை முன் வைத்தோம். தமிழில் குன்றக்குடியடிகளாருக்கு ஆகம வழியில் குடமுழுக்கு ஆட்டியதை அவர்கள் எதிர்க்கவில்லை. உண்மை இவ்வாறாக,

தருமையாதீனக்குரவர் ஏதோ தமிழுக்கு எதிரானவர் திருமுறைக்கு எதிரானவர் போன்று சித்தரிக்க முயல்வது பாவச் செயல். மேலும் சதுரர் சிவாச்சாரியார்களை தமிழர்களுக்கும் தமிழ் நாட்டுக்கும், தமிழுக்கும் பகைவர்கள் போல் சித்தரிக்கிறார். ஆனால் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேக்கிழார் சுவாமிகள் ஆகிய பேரருளாளர்கள், முப்போதும் திருமேனி தீண்டும் முதுகுலத்தவருக்கு ஏற்றம் கூறி அவர்களைத் திருத்தொண்டர்களாக வைத்து வணங்குகிறார்கள். ஆகவே அவர்களை இழிவுபடுத்துதல் தகாது. உண்மையில் பார்க்கப்போனால் அவர்கள் வர்ணாச்ரம தர்மத்தில் கூறப்பட்ட பார்ப்பனர்கள் அல்லர். பிராமணர்கள் அவர்களைப் பிராமணர்கள் என்று ஏற்றுக் கொள்வதில்லை. கா.சு.பிள்ளை ஆதி சைவர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில் அவர்கள் வேளாளர்களில் முதன்மை பெற்றவர்கள் என்று குறிப்பிடுவது கருதத்தக்கது. எனவே அவர்களைச் சாடுவது உடலில் ஓர் அங்கம் மற்றோர் அங்கத்தை வெட்டுவதற்கொப்பாகும். இதனையும் சதுரர் கருத்தில் கொள்வாராக. நிற்க.

தருமையாதீனத் தவ முதல்வரைத் தம்முடன் நேருக்கு நேர் சவாலுக்கு அழைத்த தகாத செயல் மெய் கண்டார் திருமுன் நின்று சகலாகம பண்டிதரான அருணந்தியார் வினாவெழுப்பிய செயலை நினைவு படுத்துகின்றது!

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே*

– திருமூலதேவ நாயனார்

திரு சத்தியவேல் முருகன், மரபுகளையறிந்து, திருந்தி திருவருளும் குருவருளும் குறைவறப் பெற வேண்டுமென அனைவரும் இறைஞ்சுவோமாக.

சிவ! திருச்சிற்றம்பலம். சிவ!

யாழ் பாலசுந்தரம்,
140, வடக்காவணி மூல வீதி,
மதுரை – 625 001.

வேதவேள்வியை நிந்தனை செய்துழல்
ஆதமில்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே
பாதி மாதுடனாய பரமனே
ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே!

– சம்பந்தர்

தோகையாம் பீலிகொள்வர் துவர்க் கூறைகள் போர்த்துழல்வார்
ஆகமச்செல்வனாரை அலர் தூற்றுதல் காரணமாக்
கூகையம் மாக்கள் சொல்லை குறிக் கொள்ளன்மின் ஏழுலகும்
ஓகை தந் தாளவல்லான் உறையும் மிடம் ஒற்றியூரே

– சம்பந்தர்

எங்குமாகி நின்றானும் இயல்பு அறியப்படா
மங்கைபாகங் கொண்டானும் மதிசூடு மைந்தனும்
பங்கமில் பதினெட்டொடு நான்குக்கு உணர்வுமாய்
அங்கம் ஆறும் சொன்னானும் ஐயாறுடைய ஐயனே

– சம்பந்தர்

வேதமோதி வெண்ணூல் பூண்டு வெள்ளை எருதேறிப்
பூதஞ்சூழப் பொலியவருவார் புலியின் உரிதோலார்
நாதா எனவும் நக்கா எனவும் நம்பா என நின்று
பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழனநகராரே.

– சம்பந்தர்

கூறைபோர்க்கும் தொழிலார் அமண்கூறல்
தேறல்வேண்டா தெளிமின் திருப்பத்தூர்
ஆறும் நான்கும் அமர்ந்தார் அவர்போலும்
ஏறுகொண்ட கொடியெம் இறையாரே.

– சம்பந்தர்

கூறும் நாவே முதலாகக் கூறும் கரணம் எல்லாம் நீ!
தேறும் வகை நீ! திகைப்பு நீ! தீமை நன்மை முழுதும் நீ !
வேறு ஓர் பரிசு இங்கு ஒன்றில்லை; மெய்ம்மை உன்னை விரித்துரைக்கின்
தேறும் வகை என்? சிவலோகா! திகைத்தால் தேற்ற வேண்டாவோ?

- திருவாசம்

தன்னையறியார், தலைவன் தனையறியார்,
முன்னை வினையின் முடிவறியார் - பின்னைக்
குருக்களென்னும் பேரிட்டுக் கொள்வார்கள் ! ஐயோ
தெருக்கள் தனிலே சிலர்

- குருஞான சம்பந்தர்

...சனுக்கிழைத்த குற்றம்
தேசிகன் எண்ணித் தீர்க்கும்
தேசிகர்க்கிழைத்த குற்றம்
குரவனே தீர்ப்பதன்றி
பேசுவதெவனோ தன்பாற்
பிழைத்தகாரணத்தால் வந்த
வாசவன் பழியைத் தீர்ப்பான்
குரவனே வழியுங்காண

- திருவிளையாடல் புராணம்

ஸ்ரீ ராகவேந்திரா பிரிண்டர்ஸ், மதுரை-1. செல் 99422 68003